உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவெங்கை மான்மியம்.

இஃது

திருச்சிராப்பள்ளி ஜில்லா வேங்கனூ

சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்தது

ஷையூர்

அண்ணாமலை ரெட்டியார் சந்ததியாரும்

இப்போது உள்ளவருமான

சிவநேசச் செல்வர்

## இராமலிங்க ரெட்டியார்

அவர்களால்

துறையூர்

...கார அச்சுக்கூடத்தில்

...ப்பிக்கப்பட்டது.

1934.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவெங்கை மான்மியம்.



இஃது

திருச்சினாப்பள்ளி ஜில்லா வேங்கனூர்

சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்தது

ஷையூர்

அண்ணாமலை ரெட்டியார் சந்ததியாரும்

இப்போது உள்ளவருமான

சிவநேசச் செல்வர்

## இராமலிங்க ரெட்டியார்

அவர்களால்

துறையூர்

ஜனோபகார அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1934.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவெங்கை மான்மியம்.



## விருத்தம்.

வெங்கனூர் வாழும் விமலவி நாயகன்றன்
பங்கய நேர்பாதம் பணிந்துய்ந்தேன் — மங்கல்செயும்
பாசத்தி னீங்கிப் படைத்தேன் சிவஞானம்
ஆசைநோய் முற்று மகன்று.

வேலுக்கு மம்புக்கு மாறுகொண் டோடும் விழிமடவாய்
மாலுக்கு நன்மனை யாண்மனை யாகி வழங்கும்வல்ல
கோலுக்கு வல்லவண் ணாமலை யார்கட்டு கோயிலகப்
பாலுக்கு வந்தது கண்டாய்நம் வெங்கைப் பழமலையே.

புனையெழில் வடிவி னாளோர் பொதுமகட் கண்ட மைந்தர்
மனமெனப் புலவர் நெஞ்சம் மருளுமின் றமிழ்ப்பா மாலை
சினவிடை யவர்க்கே சாத்தும் சிவப்பிர காச னென்னும்
முனைவனெம் மடிகள் பாத முளரிகள் சென்னி சேர்ப்பாம்.

இது ஆதி அண்ணாமலை ரெட்டியார் சந்ததியாரால் தற்காலத்திலுள்ள சிவநேச மிக்க இராமலிங்க ரெட்டியார் முன்னிலையில் அந்தலத்திலுள்ள சிலாசாசனத்திலிருந்து எடுத்து எழுதப்பட்டது.

நடுநாட்டில் வெங்கனூரிலே முந்நூற்றைம்பது வருடங்கட்கு முன்னே பண்ட குலத்திலே, வல்ல கோலாதிபதி யென்னும் பட்டப் பெயர் பெற்றுக் குறுநில மன்னவராய் இலிங்கம் ரெட்டியார் என்பவர் ஒருவரிருந்தார்.

அவர் கல்வி யறிவு ஒழுக்கங்களிலும், குருலிங்க சங்கம பத்தியினும் வீரசைவானுஷ்டானத்திலும் மிகச் சிறப்புற்றவராய் வாழுநாளில் பிரதோஷ காலத்திலே சிவதரிசனம் செய்தே போஜனஞ் செய்ய வேண்டு மென்னும் நியம மேற்கொண்டு தமது நகரத்திற்கும் விருத்தாசலத்திற்கும் சுமார் நான்கு காதமிருக்கவும் அத்தலத்தில் வீற்றிருக்கும் பழமலைநாத ரிடத்தும் பெரியநாயகி அம்மையா ரிடத்தும் அத்தியந்த பக்தி யுடையவராய்ப் 'பிரதோஷக் கட்டளை' ஏற்படுத்திக் தமது அருந்தவத்தாலுதித்த அண்ணாமலை ரெட்டியா ரென்னும் சற்புத்திரரோடு அப்புண்ணிய காலந் தோறும் தவறுமற்சென்று தரிசனஞ் செய்துவந்தார்.

அக்காலத்தில் ஒருநாள் பிரதோஷ தினத்தன்றே தரிசனத்தின் பொருட்டுத் தமது புத்திரரோடு புறப் பட்டு வருங்கால் பேராறு என்கிற வெள்ளாறு இரு கரையினும் வெள்ளம் பெருகி, ஓடம் முதலியவும் செல் லுதற்கும் இடங்கொடா திருப்பதைநோக்கி இலிங்கா ரெட்டியார் மனம் நைகலோடு "சிவபெருமானுக்கு உண்மைத் தொண்டராயின் இந்நதி வழிவிடுக இன் றேல் இதிலிறங்கி இறப்பதே தகுதியென" பிரதிக்ஞை

செய்துகொண்டு துணிவோடு அந்நதிபி லிறங்கலும், அது சிவபெருமான் திருவருளால் வழிவிடக் கண்டு, "எளியேங்களிடத்துப் எம்பெருமான் றிருவருளிருந்த வாறு என்னே!" என்று வியந்து புத்திரரோடு சென்று பழமலை நாதரையும், பெரியநாயகி யம்மையாரையும் தரிசித்து மனமுருகிப் பலவாறு துதித்து தமக்குச் சிவ பெருமான் பாலித்த திருவருளைச் சிந்திக்குந்தோறும் போனந்தமுடையவராய் அத்தலத்திலேயே தங்கினார். அன்றிரவிலே பழமலை நாதர் அவர்கள் சொற்பனத் திலே ஒரு சிவனடியார் போலத் தோன்றி "நீங்கள் என் இவ்வாறு கஷ்டத்தை யடைகின்றீர்கள். இனி இங்குவந்து தரிசிக்க வேண்டியதில்லை யாம் உங்கள் ஆளுகையிலமைந்த திருவெங்கை நகரத்திலே இன்ன தானத்திலே திருவுருக்கொண்டு வீற்றிருக்கின்றோம். ஆலயமமைத்து வழிபடுவீராக! அமைக்குங்கால் வட தேசத்திலிருந்து க்ஷாமத்தினால் மெலிந்து சில சிற்பர் கள் வருவார்கள். அவர்களாலே திருப்பணி பூர்த்தி யாகு"மென்று கட்டளையிட்டு மறைந்தருளினார்.

அவ்வாஞ்ஞையின்படியே திருவெங்கைநகரத்தை யடைந்து குறிப்பித்த ஸ்தானத்திலே பரிசோதிக்க அங்கே பூமிக்குள் ஒரு சிவலிங்கமும், அம்பிகை முத லிய சில மூர்த்தங்களும் இருக்கக்கண்டு அளவிடப் படாத ஆனந்த சாகரத்தின் மூழ்கி திருவருளைப் பாவி அப்பொழுதே சுவாமிக்குப் பழமலை நாதர் எனவும் தேவிக்குப் பெரியநாயகியம்மை யெனவும் திருநாமஞ்

தரிசித்து சிறிய ஆலயம் அமைத்து நித்திய பூஜை ஏற்படுத்தினார். அந்நாளிலே சிவாஞ்ஞையின்படியே வட தேசத்திலிருந்து சில சிற்பர்கள் வர அவர்களுடைய நூலுணர்ச்சி முதலிய உத்தம குணங்களனைத்தையும் நோக்கி அதிசயித்து வேண்டும் பொருள்களை வெறுக்கக் கொடுத்து அவர்களை அத்தலத்திற்றானே குடியேற்றித் திருப்பணிகளை யியற்றி வருங்கால் இலிங்கா ரெட்டியார் சிவலிங்க ஐக்கியமாய் விட்டமையால் அண்ணாமலை ரெட்டியாரே தலைவராக இருந்து அவரினும் மிகச் சிறப்பாக நடத்திவந்தார்.

ஒரு தினத்திலே அச்சிற்பர்களுக்குத் தலைவனானவன் கருப்பக்கிருகத்தின் கீழே கட்டப்பட்டிருக்கும் சாரத்தின்மேலிருந்துகொண்டு வேலைக்காரனை வெற்றிலை மடித்துக் கொடுத்தற்பொருட்டு அழைக்க அவன் அத்தருணம் அங்கில்லாமையால் அண்ணாமலை ரெட்டியார் அவ்வேலை முட்டுப்படா வண்ணம் தாம் கீழிருந்து மடித்துக் கொடுத்தனர். அச்சிற்பன் சாரத்தினது மறைப்பால் இன்னாரெனத் தெரியாது இடது கரத்தால் வாங்கி யுட்கொண்டபின் உண்மை தெரிந்து "ஓகோ! என் செய்தோ"மெனப் பெரிதும் இடரின் மூழ்கி அபசாரஞ்செய்த அந்தக் கரத்தைத் துணிக்க எத்தனித்தலும் ரெட்டியார் அவனை நோக்கி "கரத்தை துணிப்பது தகுதி யன்று. அக்கரத்தைக் கொண்டு உனக்குத் தெரிந்துள்ள அரிய வேலைகளெல்லாம் அமைய இத்திருப்பணியைப் பூர்த்தி செய்யின் என்

றும் நின்பெயர் நிலைபெறுவதன்றியும் நினக்கு எய்தற்கரிய சிவகதி பெறுவதற்கும் இதுவே ஏதுவாகும்'' என்று வற்புறுத்தினர். 'சிற்பனும் இவ்வுத்தமோத்தம உறுதி வாக்கியத்தைக் கேட்டு பெருமகிழ்ச்சி தந்து முன் கட்டிய கருப்பக் கிருகத்தை முற்றும் பிரித்து விட்டு இத்திருப்பணிபோல் யாண்டுமில்லையென யாவருங் கொண்டாட அதிவிசித்திரமாக அமைத்து முடித்தனன். கண்டவர்கள் களிகூறப் பெற்றார்கள்.

அது கண்ட அண்ணாமலை செட்டியாரும் அகங்களிகூர்ந்து அர்த்தமண்டப முதலிய திருப்பணிகளை ஒருவாறு முடித்து சாலீவாகன சகாப்தம் 1554ஆ ஆகிய ருத்திரோத்காரிஆ வைகாசி மாதத்தில் பூர்வ பக்ஷ துவாதசியும் அஸ்தநக்ஷத்திரமும் கூடிய குருவார சுபதினத்திலே ஆபத்தோத்தாரண சிவாசாரி குமாரர் பிழைபொறுத்த சிவாசாரியாரால் விநாயகர் முதலிய சகல மூர்த்தங்களுடன் பழமலைநாதரையும் பெரியநாயகி அம்மையாரையும் பிரதிஷ்டை செய்வித்து கும்பாபிஷேகமும் நடத்துவித்து பின்னும் வேண்டிய பெரும் பொருள் செலவிட்டு மஹாமண்டபம் நிருத்த மண்டபம் இரண்டு பிரகாரம் கோபுரம் திருமதில் திருக்குள முதலிய திருப்பணிகளைக் குறைவற இயற்றிக்கொண்டிருந்தனர்.

அந்நாளிலே சிவப்பிரகாச சுவாமிகள் தக்ஷிண யாத்திரையை விரும்பி சகோதரர்களோடு காஞ்சியி

னின்றும் புறப்பட்டு திருவண்ணாமலை முதலிய திவ்ய ஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு வரும்போது வெங்கனூரை யடைந்து ஒரு நந்தவனத்திலே சிவபூஜை செய்து கொண்டிருந்தார். ரெட்டியார் சுவாமிகளுடைய அற்புத மகிமைகளைக் கேள்வியுற்று அங்கடைந்து தரிசித்தமாத்திரத்திலே அவர்களிடத்தே அநுக்கிரகம் பெற விரும்பி அடிமைபூண்டு "சுவாமி தேவரீர் இவ்விடத்தில் வாசஞ்செய்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்து உடன்படுத்தி ஒரு திருமடம் கட்டி அதில் சுவாமிகளை எழுந்தருளுவித்து அகோராத்திரம் பிரிவின்றி அணுக்கத்தொண்டரா யமர்ந்திருக்க சுவாமிகள் அவருக்குச் சன்மார்க்கங்களைப் போதித்துக் கொண்டு இரண்டு வருஷம் வரையில் அங்கேயே வீற்றிருந்து பின்பு தக்ஷிணதேசஞ்சென்று யாத்திரையை முடித்துக்கொண்டு மீண்டும் வெங்கனூரையடைந்து அண்ணாமலை ரெட்டியாரால் தம்பொருட்டுக்கட்டுவிக்கப்பட்ட திருமடத்திலே வீற்றிருந்துகொண்டு அத்தலத்தைச்சுட்டித் தாமருளிச்செய்த திருவெங்கைக் கோவை, திருவெங்கை கலம்பகம், திருவெங்கையுலா, திருவெங்கையலங்காரம் என்னும் நான்கு பிரபந்தங்களுக்குள்ளே உலாவில் (41)வது கண்ணிமுதல் 67வது கண்ணி வரையும் அண்ணாமலை ரெட்டியார் பெருமையையும் திருப்பணியின் அருமையும் பாராட்டியருளினமையேயன்றிக் கோவையினும் வல்லகோலுக்கு வல்ல அண்ணாமலையார் கட்டு கோயில் எனவும் கருப்ப இல்லைற் கிணையில்லை யென்னும் திருவெங்கை எனவும்

சிறப்பித்து இயற்றியருளினர். அக்காலத்தில் அவ்வூர் பிடாரியாாது உற்சவ இரதத்தால் அடியார்க்கு உப யோகமாகத்திருமடத் தெதிரிலிருந்த முருங்கை மரம் அழிந்தமைகண்டு,

விருத்தம்.

திருந்துதமி ழிலக்கணவைந் திணைக்கோவை
விருத்தகிரிச் செல்வற் கோதும்
பெருத்தகைமை யுடையம்யாம் விடுமோலை
வெங்கைநகர்ப் பிடாரி காண்க
விரும்புவியி லொருமுருங்கைக் கொம்பொடியா
மற்காத்திங் கிருக்கும் நீநம்
முருங்கைதனை வேரோடு களைந்தனையென்
றுனுனக்கு முறையதாமே.

என்னும் திருவிருத்தத்தை அருளியமாத்திரத்தே, அவ்விரதம் அழிந்தொழிய தாம் சிலகாலம் அங்கிருந் தார். அக்காலத்திலே அண்ணுமலை ரெட்டியார் என் பவர் சுவாமிகளை "தேவரீர் விவாகம் செய்துகொள்ள வேண்டும்" என்று பிரார்த்திக்க சுவாமிகள்



செய்யுள்.

சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
பாய்கொண்டா னும்பரவும் பழமலையப்பனே
நோய்கொண்டா லுங்கொளலா நூறுவய தளவிருந்து
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே.

எனவும் :—

கலித்துறை.

நிட்டையிலே இருந்துமனத் துறவடைந்த
பெரியோர்க ணிமலன்றூளைக்
கிட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும்
பெரியசுகங் கிடைக்கும் காம
வெட்டையிலே மதிமயக்கும் சிறுவருக்கு
மணம்பேசி விரும்பித்தாலி
கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே
கிடத்துமட்டும் கவலைதானே.

என்றூர் கவித்துறையைப்பாடி, தமது கருத்தை மட்டும் உள்ளபடி வைத்தார்.

பின்பு அங்கு சில நாள் வசித்து சிதம்பரத்தை அடைந்தார்.

அன்றியும் அன்புமேலீட்டால் தாம் அங்கே ஒரு தூணிலமைத்துவைத்த சிவப்பிரகாச சுவாமிகள் திருவுருவத்திற்கு நித்திய பூஜையும் பழமலை நாதருக்கு நித்திய நைவேத்தியங்களும் திருவிழாவும் அதி சிறப்பாக நடத்துவித்து காலந்தோறும் தரிசனம் செய்து கொண்டு திருவருட்குப் பாத்திரராய்ச் சிலகாலம் வாழ்ந்திருந்து சிவலிங்க ஐக்கியமானூர். அவர் இன்னும் திருப்பணி செய்தல் வேண்டும் என்றும் வரிக்கல் பஞ்சபத்தூண்கள் அருமையான கோபுர அடுக்குத் தூண்கள் முதலியன சேகரித்து ஆலயத்தில் ஓர்புரத்து மறைத்து வைத்தனர். அவற்றை யெல்லாம் ஆதி

லிங்க செட்டியார் அண்ணாமலை செட்டியாரின் பாரம் பரைகள் எடுத்து மஹோத்சவ மண்டபம் கோபுர வாசல், யாகசாலை இன்னும் மற்ற சில்லரை திருப்பணி களும் பஞ்சலோகத்தினால் நடராஜா, பிக்ஷாடனர் நால்வர் முதலிய பஞ்சமூர்த்திகளும் கிரமப்படி உற் சவத்திற்குள்ள வாகனம், சப்பரம், சகடைகளும், பஞ்சமூர்த்திகளுக்கு ரதமும் செய்து முடித்தனர்.

விருத்தாஜலத்தின் ஐதீகப்படி குறைவாய் உள் ளதை ரங்கூன் ராஜா ராமநாத செட்டியார் அவர்களால் நூதனமாக ஆழத்துப்பிள்ளையார் கோவில் அமைக்கப் பெற்று கும்பாபிஷேகமும் செய்து அதற்குப் பூஜை, நைவேத்தியத்திற்கு பூமிகள் வாங்கி பண்டு செய்து வைக்கப்பட்டு பூஜைகள் நடந்து வருகின்றன.

விருத்தாஜலத்தின் ஐதீகப்படி பாலாம்பாள் சன் னிதி தேவையென்று ஆத்தூர் தாலூகா தாசில்தார் பிரம்மஸ்ரீ மாமுண்டி சுப்பாராயர் அவர்களுக்கு சொற் பனம் சாதித்து அவர்களால் பாலாம்பாள் ஸன்னதி யும் ஏற்பட்டு கும்பாபிஷேகம் செய்தும் பூஜை நடந்து வருகிறது. இன்னும் சொற்பனத்தில் மற்றுமுள்ள பாக்கி திருப்பணிகள் அன்பர்களின் உதவியைக் கொண்டு பூர்த்திசெய்து சமீபகாலத்தில் கும்பாபி ஷேகத்துடன் ரதோற்சவகாக்ஷியும் நடைபெற்றது. உதவி செய்யும் அன்பர்கள் பல்லூழிகாலம் மதி நிதி பதியோடு வாழ்வீர்கள் என நம்புகிறோம்.

ஆதி அண்ணாமலை ரெட்டியாரால் உற்சவ விக்ரகம், இரதம், திருக்குளம் ஏற்பட்டிருப்பதாக இதனால் தெரிகிறது. அதானது தற்காலம் பார்ப்பதற்கு ஒன்றுமே இல்லை.

இதானது திருச்சினாப்பள்ளிக்கும் நேர்வடக்கு பெரம்பலூர் தாலுகா 30-மைல், பெரம்பலூருக்கும் வடமேற்கு 12-மைல் தூரம் திருவெங்கைமா நகரம். அதாவது திருச்சினாப்பள்ளிக்கும் திருவெங்கனூருக்கும் 42-மைல் மோட்டார்கார் போகக்கூடிய ரோட்டுப் பக்கத்தில் சன்னதி இருக்கின்றது.

இதன் விரிவை விருத்தாஜல புராணத்தையும் நல்லாற்றூர் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச்செய்த பிரபந்த தோத்திரத்திரட்டிலும் காண்க.





